உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று மாதந்தோறும்வெளிவரும்

## ஒரு தமிழ்ப் பத்திரிகை.

"எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்"—திருவள்ளுவர்.

தொகுதி-௩௦] பிரஜோத்பத்தி ௵ மார்கழிமீ [பகுதி-௨.
Vol. XXX. December-1931. January-1932. No. 2.

உள்ளுறை.



பத்திராசிரியர்—திரு. நாராயணையங்கார்.

வருஷம் ஒன்றுக்கு ரூ 4.] [தனிப்பிரதி அணா—8.

வெளிநாடுகளுக்கு ரூ 4—8—0.

1932.

Printed by Srimathu RAJA M. DINAKARA BAHADUR AVL., and published by THIRU. NARAYANA IYENGAR, at the Tamil Sangam Power Press, No. 54, New Jail Road, Madura.

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-௩௰] பிரஜோத்பத்தி௵ மார்கழி௴ [பகுதி-௨.

Vol. XXX. December 1931-January-1932. No. 2.

## மறதி.

[P. N. அப்புஸ்வாமி ஐயர், (B.A., B.L.) எழுதியது.]

ஆரோக்கியமான சுகநிலையில் நாம் இருந்துவரும்பொழுது எத்தனைசங்கதிகளை நாம் மறந்துவிடுகிறோம்! நாம் சிநேகிதர்களுடன் பேசும்பொழுது 'மறந்துவிட்டேன்' 'கவனிக்கவில்லை' 'மன்னிக்கவேண்டும்' என்றெல்லாம் எத்தனைதரம் சொல்லநேரிடுகிறது. ஆனால் ஒன்று; இவ்வாறு நமது உடல் ஆரோக்கியமாயிருக்கும்பொழுது நாம் மறந்துவிடுவன எல்லாம் நமக்குப் பிடிக்காத விஷயங்களாகவே இருக்கின்றன. நாம் வாங்கிய சிறு கடன்கள் நினைவில் நிற்பதில்லை. நமக்குப் போகப் பிரியமில்லாத சபைகளையும் விசேஷங்களையும் முழுதும் மறந்துவிடுகிறோம். ஆனால் நல்ல பாட்டுக்கச்சேரிகளை மறப்பதில்லை, விருந்துச் சாப்பாடுகளை மறப்பதில்லை. இதன்பொருட்டு நாம் ஒருவிதத்திலும் முயன்று பாடுபடுவதில்லை. முந்தியவை எப்படித் தாமாகவே நமது ஞாபகத்தை விட்டு விலகிவிடுகின்றனவோ, அதேபடியாகப் பிந்தியவை ஞாபகத்தில் விடாது ஒட்டிக்கொள்ளுகின்றன. ஏன்? இன்பம் தாராதவைகளை மறப்பதும், இன்பம் தரத்தக்கவைகளை ஞாபகத்தில் வைப்பதும் இயல்பாகவே இருந்துவருகிறது. இயற்கைத் தாய் நமக்குச் செய்யும் உதவிகளுள் இதுவும் ஒன்று.

ஆரோக்கியநிலையிலிருப்பவனுக்கு இயற்கையன்னை காட்டும் பக்ஷபாதத்துக்கு அளவேயில்லை. அவனுக்கு நல்ல பசியைக் கொடுக்கிறாள்; மிகவும் ருசியான உணவைக் கொடுக்கிறாள்;—பசியன்றோ உணவை இனிக்கச்செய்வது;—மிகுந்த தேக புஷ்டியைக் கொடுக்கிறாள்; அழகிய உடலையும், ஒளிபொருந்திய பார்வையையும், காம்பீரியம்

நிரம்பிய தோற்றத்தையும் கொடுக்கிறாள்; நல்ல குழந்தைகளைக் கொடுக்கிறாள்; சுகமான வாழ்க்கையையும், அயர்ந்த தூக்கத்தையும், சிரித்த முகத்தையும், அதற்கேற்ற மனத்தையும் கொடுக்கிறாள். உலகெல்லாம் புன்சிரிப்புக்கொண்டதாகவே தோற்றும் அவனுக்குத் தன் அழகுமுழுவதையும் அவள் காட்டுகிறாள். தன் அன்பு முழுவதையும் அவன் மீது வைக்கிறாள். ஆகவே அவன் நல்லதல்லாதனவற்றைத் தானாகவே மறந்து, இன்பம் தருவனவற்றைத் தானாகவே நினைந்து இன்புற்று வாழ்கிறான். இவ் வுலகிற்குரிய சிறு கவலைகள் அவனைச் சிறிதும் அணுகுவதில்லை. ஆடும் மயிலும், பாடும் குயிலும், அசையும் மரமும், வீசும் காற்றும், பூக்கும் செடியும், தாக்கும் கடலும், அழகிய நிலவும், மாந்தரின் வனப்பும் களிப்பும் பாட்டும் கூத்தும், குழந்தைகளின் ஆரவார மழலைச்சொற்களும் அவன்மனதைக் கவர்கின்றன. அவையனைத்திலும் அவன் ஈடுபட்டு மகிழ்கின்றான். கவலைக்கிடமானவையும், வருத்தம் தரத்தக்க விஷயங்களும் அவன்கண்ணிற் படுவதில்லை, காதிற் கேட்பதில்லை. தோற்றுவதெல்லாம் அவனுக்கு ஆநந்தமயமாகவேதோற்றுகிறது.

ஆனால், இவ்வாறுள்ள ஒருவன் நோயுற்றபொழுது இவையெல்லாம் மாறிவிடுகின்றன. பெருந்தன்மையான பொதுநோக்குடன் அவன் உலகத்தைப் பார்க்கமுடியாதுபோகிறது. அதிலுள்ள சின்னஞ் சிறுவிஷயங்கள் பெரும்பெரும்விஷயங்களாகத் தோன்றுகின்றன. ஆரோக்கியநிலையிலிருக்கும் ஒருவன் சட்டைசெய்யாது சிரிப்புடன் ஒதுக்கும் ஒவ்வொருவிஷயமும், நோய்வாய்ப்பட்டவனுக்கு எண்ணி எண்ணி வருந்தவேண்டிய பெரியவிஷயமாகத் தோன்றத்தொடங்குகிறது. மறக்கவேண்டிய அற்ப விஷயங்களெல்லாம் உள்ளே ஆழத் தைத்த சல்லியபாணம்போல் நினைவைவிட்டு வெளியேபோகாமல் பதிந்துகிடந்து துன்புறுத்தத்தொடங்குகின்றன. போனது போகட்டும் என்று ஒன்றையும் அவன் மனது விடுவதில்லை. மேல் நடக்கவேண்டிய அரியமுயற்சிகளையும் அவற்றின் இனிய பயன்களையும் அது சிறிதும் நினைப்பதில்லை. கடந்தபோன, பழைய—மறக்கவேண்டிய—குறைகளையும் குற்றங்களையும் கஷ்டநஷ்டங்களையும் நினைந்து நினைந்து உருகி ஏங்கித் துடிதுடித்துக்கொண்டேயிருக்கிறது நோயுற்ற அவன்மனம்.

சுறுசுறுப்பற்ற, களைத்துப்போன மனதின் குணங்களுள் இதுவும் ஒன்று. இத்தகைய மனத்தையுடைய மனிதன் ஒருவனுக்கு ஏதாவது

சிறு நஷ்டம் ஏற்பட்டால் போதும். உடனே அவன் செலவைச்சுருக்கும் முறைகள் அனைத்தையும் ஆராயத்தொடங்கிவிடுகிறான். சிறிது சேதம் ஏற்பட்டவுடன், வேறு எவ்விதமாய் வருமானத்தைத் தேடலாம், சுறுசுறுப்பாய் எவ்வாறு உழைக்கலாம், புதிய அனுகூலமுறைகள் யாவை, என்று தேடத்தொடங்காது, செலவை எவ்வாறு குறைக்கலாம் என்று எவன் ஒருவன் எண்ணுகிறானோ, அவன் ஆரோக்கிய நிலையில் இல்லை என்பது நிச்சயம். அவனுக்கு ஞாபகத்தின் தொந்தரை மிகுதியாயிருக்கிறது. முன்காலத்திலே ஆராய்ந்து பயனற்றவையென அவன் கண்டுகொண்ட முயற்சிகளெல்லாம் ஒன்றின்பின் ஒன்றாய் அவன்முன்பு தோன்றி அவனுடைய ஊக்கத்தைக் கெடுக்கின்றன. அவன் துணியிலும், தபால்தலையிலும் இவை போன்ற சிறுவிஷயங்களிலும் மூடத்தனமாகச் செலவுகளைச் சுருக்க நாடுகிறான். மேன்மேலும் சுறுசுறுப்புடன் புதுப்புதுத் துறைகளில் ஊக்கத்துடனும் ...த்தியுடனும் முயலுவதுதான் சரியான சிக்கனமுறை என்பதை அவன் அறிந்துகொள்ளுவதில்லை. வன்மையற்ற அவன் கோழை மனது அவனை இவ்வாறு கலக்கிவிடுகிறது.

புதிதுபுதிதான துறைகளில் மேன்மேலும் முயலவேண்டுவது அவசிய...ாயின் மறதியும் அவசியம். பழைய தோல்வியை எண்ணி எண்ணி ஏங்கும் ஒருவன் நிச்சயமாய்ப் புதிதாக வெற்றியடையமாட்டான். ‘போனதெல்லாம் போகட்டும்: இனிமேல் ஒருகை பார்ப்போம்’ என்பதுதான் ஒருவனுடைய வீரவாக்காக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் அவன் மேன்மேலும் விருத்தியடைவான். முந்தின முயற்சி ஏன் வீணாயிற்று? என்னும் அளவில் மட்டிலுமே முடிந்துபோனவிஷயத்தைப்பற்றிச் சிந்திக்கவேண்டுமேயல்லாது அதற்கு மேல் அதைப்பற்றிய நினைவுக்குச் சிறிதும் இடந்தரவே கூடாது. கடந்துபோன விஷயங்களை ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் ஆராய்ந்து அவற்றிலுள்ள ஜயசாதகமான அறிகுறிகளை மட்டிலும் இன்னவென்று தெரிந்து நன்கு வற்புறுத்திக்கொள்ளவேண்டும். மற்றப்படி அவ்விஷயங்களை முழுதும் மறந்துவிடவேண்டும். இதற்கு மனோதிடம் அதிகம்வேண்டும். வெற்றிக்குரிய முறைகளைத் தெரிந்தெடுப்பது அவ்வளவு எளிதான காரியமன்று. எத்தொழிலிலும் முன்னேற்றமடையவேண்டுமாயின் திறமையும், விஷயங்களைச் சீர்தூக்குவதற்கு வேண்டிய நுண்ணறிவும், துணிவும் இன்றியமையாத குணங்களாகும். மறதிக்கும் இக்குணங்களே காரணமாகின்றன.

சிலர்மனம் படம்பிடிக்கும் போடோகிராப்பெட்டி போன்றது. தாம் எப்பொழுதாகிலும் அறிந்துகொண்ட எந்த விஷயத்தையும் அவரால் மறக்கமுடியாது; அனுபவித்த எந்த அநுபவத்தையும் மறக்க முடியாது. சின்னஞ்சிறிய வயதில் நடந்த அற்பவிஷயங்களுங்கூட இன்று நேற்று நிகழ்ந்தனபோல் அவர் மனதில் பதிந்தூன்றி அவர் முன் எப்பொழுதும் நின்றுகொண்டேயிருக்கும். அவர் நிலைமை பரிதபிக்கத்தக்கது என்றேதான் கூறவேண்டும். கலங்கியவெள்ளம் போன்ற அவர்களுடைய நினைவானது ஒருவித முயற்சியிலும் அவர்கள் படிந்து உழையாதபடி அவர்களைத் தள்ளித் தள்ளிக் கடைசியிற் கரைகாண இயலாத பெருங் கவலைக்கடலுள் அவர்களைப் புகுத்திவிடுகிறது.

இதற்கு உதாரணமாக ஆராய்ச்சியாளர் ஒருவர் தாம் நேரில் கண்டறிந்த விருத்தாந்தம் ஒன்றைச் சொல்லுகிறார். ஒரு பிரபல வியாபாரி, கீழ்நிலையிலிருந்து முன்னுக்குவந்தவர், இடைவிடாது உழைக்கும் சுபாவமுள்ளவர், இம்மாதிரியான நினைவுநோயுற்றனர். அதனால் அவர் சிறுபிராயத்திற் செய்த சிறுசெயல்களெல்லாம் அவருடைய நினைவுக்கு வந்தன. அவர் அக்காலத்திலே அற்ப சொற்பம் பிறரிடம் கடனாக வாங்கித் திருப்பிக்கொடாத தொகைகளெல்லாம் அவர்முன் வந்து தோன்றின. உடனே அவற்றையெல்லாம் கடன்காரரின் வாரிசுகளைத் தேடிப்பிடித்து வட்டியுடன் கொடுத்துவிட ஏற்பாடு செய்தார். ஆனால் அன்று முதல் அவர் அதுவரை செய்துவந்ததுபோல் துணிந்து வியாபாரம் நடத்தவில்லை. புதிதாக ஏதாவது ஒரு யோசனையானது மனத்தில் தோன்றும், உடனே அதற்குப் பாதகமாக உள்ள விஷயங்கள் முன்னே நிகழ்ந்தனயாவும், அவைபோன்று பயன்படாதுபோன பழைய நிகழ்ச்சிகள் எல்லாம் வகிபவித்து அவர்முன் நிற்கும். அவற்றைக் கண்டு வெருண்ட அவர் மனமானது அவரைப் புதிய முறைகளைக் கையாளவொட்டாது தடுத்துவிடும். பச்சைப்பயிருக்குப் பாய்ச்சும் தண்ணீரைப்போல் பணத்தை இறைத்துவந்த அவர் சில்லறைச் செலவுகளைக்கூடப் பெருந்தொகைகளாகக் கருதலானார். அற்பமான முறைகளிலெல்லாம் செட்டுப் பிடிக்க ஆரம்பித்தார். இதனால் பிறர் நகைப்புக்குத் தன்னை உள்ளாக்கிக்கொண்டாரேயல்லது அவர் வேறுபயனொன்றும் அடையவில்லை. அவர் வியாபாரமும் நாளடைவில் குன்றிக்கொண்டேவந்தது. அவரும் வியாபாரம் குறைந்துபோவதைக்கண்டு மேன்மேலும் கவலையுற்று நன்றாக நோய்வாய்ப்பட்டனர். அவரைப்

பார்த்த வைத்தியநிபுணர் விஷயம் இன்னதென்பதை அறிந்து, சிறிது காலம் அவர் வேலையைவிட்டொழித்துக் கவலையில்லாமல் சௌக்கியமான ஊர் ஏதாவது ஒன்றிலே போய் இருக்கவேண்டுமென்று வற்புறுத்தினர். அவருடைய உடலானது ஆரோக்கியம் அடைய அடைய நினைவு மறைந்து மறதி உண்டாயிற்று. மறதியுடன் துணிவும் கூடவே வந்தது. அவர் மீண்டும் வியாபாரத்திற் புகுந்து தீரத்தனமான முறைகளை முன்போற் கையாண்டு அதனாற் செழித்து வாழ்ந்துவந்தார்.

மறதியானது பெரும்பாலும் தற்செயலாய் நிகழ்வதன்று. நன்கு பயின்ற மனத்தின் நன்முயற்சியே அது. ஒருவன் திடகாத்திரனாய் ஆரோக்கியநிலையில் இருந்து வலியமனம் பெற்றிருந்தாலன்றி அவனுக்கு மறதியே ஏற்படாது; அல்லது ஒருகால் ஏற்பட்டாலும் ஒழுங்கில்லாதபடி இருக்கும். முக்கியமானது எது, முக்கியமல்லாதது எது, என்பதைத் தெரிந்துகொண்டு, முக்கியமல்லாததை அறவே அகற்றும் மனப்பான்மைதான் அது. மனம் விரிய விரிய இவற்றுள் ஒன்றுக்கொன்றுள்ள தாரதம்மியம் நன்கு புலனாகும். அப்பொழுது அல்பமான நிகழ்ச்சிகளும் எண்ணங்களும் பொருட்படுத்தப்படமாட்டா. பெரும் விஷயங்கள்மட்டிலுமே கருதப்படுவன. இதைத்தான் நாகரிகமென்று நாம் சொல்லுகிறோம்.

நோயினாலேதான் ஞாபகப்பிசகு ஏற்படுகிறது என்று நம்முள் பலர் எண்ணிவருகின்றனர். மறதி ஏற்பட்டால், நோயைக் காட்டும் ஒரு அறிகுறியாகவே அதைக் கருதுகின்றனர். உடலானது ஆரோக்கியமான நன்னிலையினின்றும் தவறும்போதுதான் ஞாபகக்குறைவு உண்டாகின்றது என்று கூறுகின்றனர். சிற்சிலநோய்களிற் சிற்சிலவேளைகளில் நோய்காரணமாகவே மறதி உண்டாகின்றது என்பது மெய்தான். ஆனால் நாம் ஊன்றிக் கவனித்துப்பார்த்தால் ஞாபகசக்தியானது நோயுற்றகாலத்தில் மிகுந்தும், நோயற்றகாலத்திற் குறைந்தும் காணப்படுகிறது. ஆகவே அதிகப்படியான நினைவுதான் நோயின் குறி.

நரம்புகள் பலஹீனப்படுவதாலே மறக்கும் இயல்பு குறைந்துபோக நேரிடுகிறது. உடலின் பொதுநன்மையின்பொருட்டு உடற்கூறுகள் யாவும் தம் நலத்தைக் கருதாது உழைத்துவரவேண்டும் என்னும் உடற்போஷக முறையானது சரிவர நடந்தேறவில்லை என்பதையே இவ்வகையான மறதிக்குறைவானது குறிக்கின்றது. நாம் வேண்டாதபோதும் முன்வந்து நிற்கின்ற நினைவுகள் எல்லாம் உடலின் மேலதிகாரத்துக்கு

அடங்கி நடவாத கலகக்காரர்கள். அவை உடலுக்குச் செய்யவேண்டிய மெய்த்தொண்டு என்னவென்றால் தாம் தலைகாட்டாது மறைந்து போவதைத்தவிர வேறல்ல. அவை உள்ளே மறைந்துபோகாது மீறி வெளியே வருவதானது உடலையும் மனத்தையும் ஆரோக்கியநிலையி னின்றும் வழுவாதபடி பாதுகாத்துவரும் சக்திகள் தம் வலியை இழந்துவிட்டனவென்பதற்குச் சரியான சான்றாகும். மரணகாலம் நெருங்கும்போது சின்னஞ்சிறிய அற்பவிஷயங்களெல்லாம் மறையாது அணியணியாக நினைவின்முன்வந்து நிற்பதற்கு இதுவேதான் காரணம்.

நினைவு கட்டுக்கு அடங்காதுபோய்விட்டால், உடனே சிரமபரி காரஞ்செய்துகொள்ளுவது மிகவும் அவசியம். வேறு இடங்களுக்குச் சென்று நினைவுகளை மாற்ற முயலவேண்டும்; அல்லது அதுவரை வழக்கமாகச் செய்துவந்த தொழில்களைச் செய்யாது சிறிதுகாலம் நிறுத்திவைக்கவேண்டும். பெரும்பாலும் உடல் நோயுற்றிருப்பதா லேயே தோன்றும் இந்தத் துன்பமானது உடல் ஆரோக்கியம் அடைந்த வுடன் அகன்றுவிடுகிறது. சிற்சில வேளைகளில் மனோவியாதியாலும் இவ்வகையான ஞாபகப்பிசகின் தொந்தரவு ஏற்படக்கூடும். அப் பொழுது மனோவியாதிகளைக் குணப்படுத்தவல்ல சில நிபுணர்களிடம் போய் அதற்குத் தகுந்த சிகிச்சைகளால் ஆரோக்கிய மடையவேண்டும்.

இவ்வியாதியானது காலத்தையும் பொறுத்ததாகக் காண்கிறது. இளவெயில்வீசும் ஒளிநிரம்பிய உற்சாகமான காலங்களிலே இந்நோ யானது பொதுவாகத் தோன்றுவதில்லை. ஈரமும் மழையும் சிலுசிலுப் பும் இருட்டும் இந்நோய்க்குத் துணைவர்கள். உறக்கமின்மை, ஓய் வின்மை, திரவியநஷ்டம் போன்ற கவலைதருகின்ற விஷயங்களும் இந் நோய்க்குக் காரணங்கள் என்னலாம். ஆனால் மேலே சொன்னபடி உடல்நோய்தான் இவை யாவற்றிலும் மேலான காரணமென்பதற்கு ஐயமில்லை.

உடலானது நோயற்று ஆரோக்கியநிலையை அடைந்த உடனேயே மறதியும் தளிர்த்துத் தழைத்துச் செழித்தோங்குகிறது. அதனால் நாம் பின்மேலும் ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் பல துறைகளி லும் முயலத் தொடங்குகின்றோம். ஆதலால், ஒழுங்காயுள்ள மறதி யானது—இன்பமொழியும் மறதியானது—மாந்தர்க்கு மிகவும் உற்ற துணையாகும்.

---

# யவனமஞ்சரி.

[ஒழுக்கநூல்.]

## முதற் பாகம்.

முதல் ஐந்து அதிகாரமும் முன்னுரைபோலும்.

### 1-ம் அதிகாரம் நோக்கம்.

எந்த நோக்கத்திலும் எவ்வித ஆராய்ச்சியிலும் எச் செயலிலும் யாதோ சில நன்மையைக்குறித்து அவ்வம்முயற்சி செய்யப்படுமென்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்ததோருண்மை. ஆனதுபற்றி யாதோ ஒரு நன்மை எவ்வாராய்ச்சியிலும் ஆராய்ச்சிவல்லுநர் நோக்குகிறார்களென, நன்கு கூறப்பட்டுளது. ஆதலினன்றே குறித்த நோக்கமுதலியவற்றி னிலக்காக அமைவதனை நன்மை என்பர். இது பெரிதும் பொருத்த மானதே. மேற்காட்டிய நன்மைதான் இதுவெனப் பலர்க்கும் ஒப்ப முடிந்ததொன்றன்று; என்னை? அதுதான் நோக்கமுதலியவற்றோடு தொடர்புடைய பயிற்சிமாத்திரை யென்பாரும், அப்பயிற்சிக்கப்பாற் பட்டதொன் றென்பாரும் மாறுபடுதலின் என்க. அந்நன்மை பயிற்சிக் கப்பாற்பட்டதென யாண்டுக் கொள்ளப்படுகின்றதோ ஆண்டுப் புயன் பெரிது முடைத்தாதல் காண்க.

செயல்களும் தொழில்களும் சாஸ்திரங்களும் பலவாகையால், நோக்கங்களும் பலவாயின. உதாரணமாக வயித்தியநூலின் நோக்கம் தேகசௌக்கியம்; கப்பல் கட்டுவிப்போரின் நோக்கம்--கப்பலையுண்டாக்கு வது; யுத்தத்தின் நோக்கம்--வெற்றி; திரவியந்தேடலின் நோக்கம்--ஐசுவரியம். இத்தகைய நோக்கங்கள் பலவற்றை ஒரு நோக்கத்தி லமைத்து ஓர் ஆராய்ச்சி செய்வோம். உதாரணமாக:--குதிரையேற்றத்திற்காகக் கடிவாளத்தையும் உடுப்பையும் உண்டாக்குவது ஒருநோக்கம். குதிரை யேற்றமாகிய நோக்கம் யுத்தநோக்கத்திலும், யுத்தநோக்கம் அரசியல் முறையிலும் அடங்குதல் காண்க. சிறுச்சிறு நன்மைகளையடக்கிய பெரிதான நன்மைகளே உலகத்தாரால் வேண்டப்படுவன. இங்ஙனங் கொள்ளல் சத்திப்பயிற்சியே நன்மையென்பார்க்கும் அதற்கப்பாற்பட்ட தே நன்மையென்பார்க்கும் ஒப்பமுடிந்ததென்பது.

## 2-ம் அதிகாரம். மகாநோக்கம்.

எல்லாச் சிறப்புமுயற்சிகளும் எதிர்நோக்கும் ஒரு மகாநோக்கம் தன்னுள் ஏனைய முயற்சிகளையெல்லாம் அடக்குமாயின் இம்மகா நோக்கத்திற்காகவே மற்றும் முயற்சிகளெல்லாம் செய்யப்படும். இம் மகாநோக்கம் ஏனைய நோக்கங்களினுஞ் சிறப்புடைத்து; ஏனெனில் ஒவ்வொருநோக்கமுஞ் சமமாயின் இச்சையே பெருக, எந் நோக்கத்தைப் பற்றவேண்டுமெனத் தெரியாமற் செயலற்று மனிதன் மயங்குவான். இத்தகைய மகாநோக்கம் என்னவென்பதை ஆராய்வது அவசியம். வில்வீரன் குறித்ததோர் இலக்கிற் றன் அம்புகளை எய்யுமாறுபோல, நாங்களும் எமது நோக்கங்களை எய்தக்கூடும். இவ்விதமானால் இம் மகாநோக்கத்தின் சொரூபத்தை ஒருவாறு ஆராய்தல்வேண்டும். அது எத்தொழிற்கு எவ்வாராய்ச்சிக்கு, எச் சாஸ்திரத்திற்கு உரிய பொருள் என்பதை ஆராய்வாம். பலவகை ஆராய்ச்சிகளையுடைத்தாகலான் இவ்வாராய்ச்சி ஓர் மகா சாஸ்திரமாகும்

## 3-ம் அதிகாரம். நன்மை.

இந் நன்மையாராய்ச்சி அரசியலாராய்ச்சி யெனக் கூறுதல் சாலும். அரசியலாராய்ச்சியென்பது அரசர் அமைச்சர் ஒற்றரது செல்வத்தைக் கருதுவதன்றித் தேசத்தின் பொதுநயத்தை ஆராய்வது என்பது இந் நூலாசிரியர் அரிஸ்தாதில் என்பவரின் அபிப்பிராயம். என்னை? அரசியலாராய்ச்சி எந்தெந்தச் சாஸ்திரந் தேவையென்றும் எவ்வெவ் வாராய்ச்சியை எவர் எவர் செய்யவேண்டுமென்றும் எவ்வாறு செய்ய வேண்டுமென்றும் வரையறுக்கின்றது. இவ்வரசியலாராய்ச்சிக்குத் துணையாகவே பொருணூலாராய்ச்சியும் யுத்தநூலாராய்ச்சியும் சொற் பொழிவுநூலாராய்ச்சியும் ஓவியம் சிற்பம் ஆயுள்வேதம் வில்வேதம் முதலிய கலைஞானப்பயிற்சிகளது ஆராய்ச்சியும் மற்றும் பிற ஆராய்ச்சிகளும் செய்யப்படுகின்றன. இவ்வாராய்ச்சி ஏனையவாராய்ச்சிகளை அடக்கி வியாபிப்பதால் மனிதனுக்குவேண்டியபயனைக் கொடுக்கத்தக்கதாயிருக்கும்.

தேசநன்மையும் தன்னயமும் மாறுபட்டால், தன்னயத்தினும் தேச நன்மையையே கருதுவது நன்று. ஒருவர்க்குச் செய்யும் உதவியிலும் தேசமுழுவதற்குஞ் செய்யுமுதவி சாலச் சிறப்புடைத்து. இது நிற்க.

எல்லா ஆராய்ச்சிகளிலும் ஒரே அளவு நுட்பத்துடன் ஆராய்தல் இயலாததாகலின் எமதாராய்ச்சியிலும் ஆராய்ச்சிக் கேற்ற நுட்பத்துடன் ஆராய்வாம். அரசியல்நோக்கமாகிய நன்மைகள் பலவகைப்படுகின்றமையால், சிலர் அவற்றினும் வேறாய், இயற்கையிலே நன்மை தீமை எனப் பாகுபாடு இல்லையென்றும், இப்பாகுபாட்டை மனிதர் ஓர் உடன்படிக்கைச் சபையில் செயற்கையாகச் செய்தனர் என்றுங் கூறுவர்.

இனி எது நன்மை யென்பதில் ஐயம் நிகழும். ஏனெனில் நன்மை தீமையைப் பயக்கின்றது. ஐசுவரியம் என்னும் நன்மை சனங்களைத் தீயராக்குவதுண்டு. வீரியம் என்னும் நன்மைக்காகச் சிலர் உரிமையை இழக்கிறார்கள். இச்சாஸ்திரத்தில் எம்மாலெடுத்தாளப்பட்ட கொள்கைகள் எமது நோக்கத்தை நுட்பமாயாராய்வதற்குத் தடையாயிருந்தாலும் அவற்றை யொருவாறு ஆராய்வாம். ஐயப்பாடுடைய சாதனங்களிலிருந்து அநுமித்தால் ஐயமாகிய சாத்தியமே தலைப்படும். இந்நூல் கற்பவர் இவ்வாராய்ச்சிக் கேற்ற நுட்பத்தைமாத்திரம் நம்மிடத்தில் எதிர்பார்த்திருக்கலாம். ஒவ்வொருநூலிலும் அததற்கேற்ற நுட்பத்தை அறிவுடையோர் தங்கள் நூல்களிற் காட்டுவர். கணித சாஸ்திரவல்லுநரின் நுண்ணறிவை ஏனைய சாஸ்திரவல்லுநரிடம் எதிர்பார்த்தல் தவறு. ஒவ்வொருவரும் தமது கலைஞானப்பயிற்சியிலாயினும் தமக்கிஷ்டமான சாஸ்திரத்திலாயினும் வல்லுநராவர். எல்லாச் சாஸ்திரங்களையும் செவ்விதாகக் கற்றவரை நல்லறிஞர் என்போம்.

இளைஞர் அரசியல்விஷயங்களி லாராய்ச்சிசெய்யத்தக்கவரல்லர். அநுபவங்குறைந்தவராகலானும், மனப்போக்கிலழுந்தியிருப்பராகலானும் இளைஞர் அரசியல் ஆராய்ச்சியின்பயனை அறியார். இவ்வாராய்ச்சிக்கு அநுபவமில்லாத வயோதிகரும் இளைஞரைப்போல விலக்கப்பட்டவராவர்; அநுபவக்குறைவே குற்றம். வயதுக்குறைவு குற்றமன்று.

இளைஞர் புத்தியின் ஆஞ்ஞைப்படி ஒழுகாமல் மனப்போக்கின்வழியொழுகுபவராகலான் அவரை அநுபவமில்லாதவரென்கிறோம். புலன்களிற் சிக்குண்ட தூர்த்தரின் அறிவால் பயனில்லை. ஐம்புலனொடுக்கிய சான்றோர் தமது அறிவை வளர்த்து அதனாற் பயனெய்துவர்.

## 4-ம் அதிகாரம். நன்மையே இன்பம்.

இதுகாறும் இந்நூல் கற்பவர் எந்நோக்கத்துடன் கற்கவேண்டுமென்பதையும் எவ்விஷயம் ஈண்டு ஆராயப்படுமென்பதையும் ஒருவாறு இம்முகவுரையிற் கூறினேம். இனி இந்நோக்கங்களில் எது மகாநோக்கமென்பதை ஆராய்வாம். புலவராயினும் பாமரராயினும் நோக்குவது இன்பம் என்பது எமது அபிப்பிராயம். இன்பத்தைப்பற்றிய அபிப்பிராயங்கள் பல. பாமரர் இன்பந்தருவது செல்வமென்றும் தேகாரோக்கியமென்றும் புகழ் என்றும் பலவாறு கூறுவர். ஒருசாரார் ஒருவாறு கூறுவர்; மற்றொருசாரார் வேறொன்றென மொழிவர். ஒருவரே ஒருவேளையி லொன்றையும் வேறொருவேளையில் வேறொன்றையும் இன்பமெனக்கொள்வர். சிலர் சுகவீனத்தின்பின் சுகத்தை இன்பமென மயங்குவர். நல்கூர்ந்தான் செல்வத்தை இன்பமென அறியாது கூறுவன். சிற்சில தத்துவஞானிகள் உண்மையான ஒருவகைத்தொடர்பும் இல்லாத ஒப்பற்ற நன்மையொன்று உளதென்பர். (ஒரு நன்மையைப் பிறநிமித்தமில்லாமல் அந்நன்மைக்காகவே பற்றுவோமாயின் அதை ஒப்பற்றநன்மை யென்பாம். ஒப்பற்றநன்மை பாமநன்மை என்பன ஒருபொருட்கிளவி.) அபிப்பிராயங்கள் பலவென்பது வெளிப்படையாகலான் புத்திக்கு நலமாய்த் தோன்றுவனவற்றை எடுத்து ஆராய்வாம்.

ஆதார பிரமாணங்களை எடுத்தாண்டு அநுமித்து வேறு பிரமாணங்களைப் பெறும் முறைக்கும் அப்பிரமாணங்களுக்கு உடன்படாது எமது ஆராய்ச்சியின்பயனாக அவ்வாதார பிரமாணங்களைக் கற்பிக்கும் முறைக்கும் உள்ள பேதத்தை நாம் கவனிக்கவேண்டும், உரையளவையால் விதித்த பொதுப்பிரமாணத்தின்வழி ஒழுகுதலோ அல்லது வழியளவையான் எது பிரமாணமென ஆசங்கித்துப் பரிகரித்து வலியுறுத்துவதோ முறையென ஐயப்படுவேம். நன்று, யாம் அறிந்தவற்றிலிருந்தே தொடங்கவேண்டும். அறிந்தபொருள் யாம் அறிந்தபொருளும் பிறரறிந்தபொருளுமென இருவகைத்து. யாம் அறிந்தபொருளிலிருந்தே தருக்கஞ்செய்யத்தொடங்குவது உத்தமம்.

நற்பழக்கமுடையவரே எது நன்று எது தீதென ஆராய்தற்கு உரிமையுடையர், இத்தகையார் பிரமாணத்தைத் தாமே அறிந்தும் பிறர்

கூறியபோதேயறிந்தும் தெளிந்துகொள்வார். ஒருவராலும் எது நன்மை எது தீமையென நிலைநிறுத்த இயலாதாகையால் நாம் அவற்றை அறிவதற்கு நற்பழக்கமுடையாராயிருத்தல்வேண்டும். நற்குணமில்லானும் அவற்றை மொழிந்தவுடன் உடன்படாதானும் 'ஈசியஸ்' என்னும் புலவரின்கூற்றை நோக்குவாராக. "ஒருவன் தன்னிலைமையை யறிய வேண்டும்; நல்லவனுகில் ஞானிகளி னுரைகளை மீறியொழுகலாகாது; மேலும் தன்னியல்பை அறியாதானும் புத்திமதி கேளாதானும் ஒன்றற்கும் உதவான்".

## 5-ம் அதிகாரம். மகாநோக்கம் இன்பவாழ்வோ?

பெரும்பாலும் தலைவர்களது வாழ்க்கைவரலாறுகளைக் கற்று எவ்வகைவாழ்க்கை நன்றென ஆராய்ந்து நாம் தீர்மானிக்கிறோம். கல்வியறிவில்லாத பொதுமனிதர் இன்பமே நன்மைகளில் மேலானதென்பர். சந்தோஷமானவாழ்க்கை இன்பம், தேசமுன்னேற்றம், ஞானமென மூவகைநோக்கமுடைத்து. பொதுமக்கள் விலங்குத்தன்மையுடையராதலால் இன்பவாழ்க்கை நன்மையுடையதென அதை நாடுவர். தலைவர்களும் இன்பநோக்கமுடையராதலின் இன்பநோக்கமும் போற்றப்படும். இஃதிங்ஙனமாக, கல்வியறிவுடைய அறிஞரும் அரசியல் நடத்துவோரும் புகழைத்தேடுவதில் தங்கள்காலத்தைக் கழிப்பர். புகழ் பிறர்மேற் றங்கியிருப்பதாலும் புகழை வினைமுதல்வன் தானே பெருக்குவது இயலாததாகலானும் அதை நன்மையாகக்கருதுதல் தவறு. ஒரு நன்மையைப் பிறரால் ஆக்கவும் அழிக்கவும் இயலாதாகையால், அதை ஒவ்வொருவரும் தாமே தேடவேண்டும். தங்கள் நற்குணங்களை உலகம் மெச்சுதற்காகப் பொருளையும் புகழையும் மக்கள் விரும்புகிறார்கள். புகழினும் நற்குணம் சிறந்தது.

நற்குணம் எல்லா நன்மைகளினும் பெரிதென்பதை ஆசங்கிப்பாருமுளர். எல்லா நற்குணங்களும் பொருந்தியவர் நித்திரைசெய்து செயலற்றுச் சோம்பித்திரியக்கூடும். மேலும், அவர் பற்பல துன்பங்களையும் இடர்களையும் அநுபவிக்கக்கூடும். பிறர்க்கு யாதொரு தீங்குஞ் செய்யாத இத்தகைய நல்லவரையும் சந்தோஷமுடையாரென மொழியாதிருப்பது நோக்கற்பாலது. மூன்றும் நோக்கமாகிய தியானத்தைப் பற்றிப் பின்னர்க் கூறுதும். பணத்தைச் சேகரித்ததால் விளையும்

இன்பம் இயற்கைக்கு விரோதமானது. அன்றியும் திரவியந்தேடல் மற்றும் ஒரு நோக்கத்திற்குத் துணையாவதொழிய அது ஒரு மகா நோக்கமாகாது. இன்பமும் நற்குணமும் முறையே மகாநோக்கமென ஆற்றலுடன் வாதிக்கப்படினும் அவை மகாநோக்கமன்று.

## 6-ம் அதிகாரம். நன்மையின் இலக்கணம்.

இவ்விடத்து எது நன்மை என்பதை ஆராய்வாம். எமது அபிப்பிராயமும் எமது நண்பர் பிளேற்றோவினுடைய அபிப்பிராயமும் ஒன்றோடொன்று மாறுபட்டிருப்பினும், இருவரும் தத்துவஞானிகளாகலின் நாம் உண்மையைக் கடைப்பிடிப்பாம். பிளேற்றோவினுடைய கொள்கைக்கு மாறாக உலகத்திற் பல மகாநன்மைகள் இலவென்றும் எல்லாவற்றிலும் பிரதானமான ஒரு மகாநன்மையுண்டென்றும் நிரூபிப்பாம். பிளேற்றோவின் கொள்கை:— இவ்வுலகில் இருக்கும் பொருள்கள் எல்லாம் சுத்தப்பிரபஞ்சமாகிய நினைவுலகிலிருக்கும் பொருள்களின் விருத்தி. அதாவது உலகப்பொருள்கள் இலட்சணங்களிற் குற்றமுடையனவென்றும் இப் பூரணப்பொருள்களெல்லாம் இலட்சணங்களில் யாதேனும் ஒரு குறைவுமின்றிச் சுத்தமாய் நினைவுலகிலிருக்கின்றனவென்றும் இந்நினைவுலகு, புலன்களால் அறியப்படும் எங்கள் நிலவுலகிலும் உண்மையானதென்றும் பிளேற்றோ கூறுவர். முதலாவதாக:—நன்மையென ஒரு இனம் இல்லை. (Genus) ஒரு இனத்தைச் சேர்ந்த இருபொருட்குப் பொதுவாயுள்ள பொருளைச் சுட்டிக்காட்டி அதற்குப் பிளேற்றோ பெயரிடவில்லை. ஒருபொருள் முன்தோன்றியும் மற்றொன்று பின்தோன்றியும் இருப்பின் இவ்விரு பொருட்கும் பொதுவாய பொருள் இல்லையென்றார். மேலும் இரு எண்களுக்குப் பொதுவாய ஓரெண் இல்லையென்றார். நன்மையென்னும் விசேடணம் குணிகளுக்கும் குணங்களுக்கும் தொடர்புகளுக்கும் பிரயோகிக்கப்படும். சுதந்தரமாய் இருக்கும் குணிப்பொருள் காலத்திலும் இடத்திலும் தோன்றும் மாறுபாடுடைய குணங்களிலும் முந்தியது. இருகுணிகளின் குணபேதத் தொடர்பு குணியின் இடையிடையே தோன்றுவது. குணத்திற்கும் குணிக்கும் ஒரு பொதுப்பொருள் இல்லையெனப் பிளேற்றோவின்மதம்பற்றிக் காட்டினும்.

இரண்டாவதாக: நன்மையென்னும் பதம் பேதமான பலவகையாய்ப் பிரயோகிக்கப்படும். உதாரணமாகக் கடவுள் நியாயம் முதலிய சுதந்திரப்பொருள்கட்கும் அறங்கள் முதலிய நிலைகட்கும் பெரிய சிறிய

என்ற தொடர்புகட்கும் காலத்திற்கும் இடத்திற்கும் நன்மையை விசேடமாகப் பிரயோகித்தல் வழக்கம். ஆகையால் நன்மை என்னும் பதத்திற்குப் பல கருத்துண்டு. இவ்வாறு பல கருத்துண்டாயினும் நன்மைகள் ஓரினத்தைச் சேர்ந்தனவே.

மூன்றாவதாக: நன்மை ஒரே யொரு பொருளுடைத்தாயின் ஒரே யொரு சாஸ்திரம் வேண்டப்படும். அவ்வாறின்றி, உலகிற் பல சாஸ்திரங்கள் உண்டென்பதை நாம் அறிவோம். யுத்தத்தில் யூகமும் வைத்தியத்தில் சுகமும் தேகாப்பியாசத்தில் எத்துணை அளவும் வேண்டுமென்று பல ஆராய்ச்சிகளுள.

நான்காவதாக: சாதாரண மனிதனுக்கும் தனது நினைவுலகில் இருக்கும் பூரணமனிதனுக்கும் பெரும்பேதம் உண்டென்று பிளேற்றோ கூறுகின்றார். மக்கட்டன்மையில் இருவருக்கும் பேதமின்றென்பது எமதுகொள்கை. நினைவுலகில் இருக்கும் ஒப்பற்ற பரமநன்மைக்கும் நிலவுலகில் ஒப்புநோக்கிய நன்மை எனப்படும் உலகநன்மைக்கும் நன்மைத்தன்மையில் ஒருபேதமு மில்லை.

ஐந்தாவதாக: பிளேற்றோ நன்மையை நித்தம் என்பதனாற் சுகமென்ன? நன்மை நித்தநன்மையாயினும் நன்மைத்தன்மையில் மிகுவதில்லை. ஒரு வெள்ளைநிறமுடையபொருள் நீடூழிகாலமிருப்பினும் வெண்மையாகியபண்பிற் பெருகாது. பிதாக்கோறுய்ஸ் செயசுப்பஸ் ஆகிய இருவரது கொள்கை இதிலும் சிறந்ததுபோலும்; இவற்றையெல்லாம் வேறோர் அமயத்தில் ஆராய்வோம்.

இனி, பிளேற்றோவினுடைய கொள்கையின்படி இருவகை நன்மைகளுள. நன்மைகள் நிலவுலகில் நித்தமாய் ஒவ்வோர் பூரண அமைப்புப் பெற்றிருக்கின்றனவென்றும் நிலவுலகநன்மைகள் தோன்றிநின்றழியும் தன்மைத்தாய் நினைவுலகநன்மைகட்கிணங்க ஒவ்வோர்சிறப்பாய் எங்களுலகிலிருக்கின்றன என்றும் கூறுவர் ஆசிரியர் பிளேற்றோ. நிலவுலகின்கண் ணமைக்கப்பட்ட பரமநன்மைகளுக்கு ஆதாரமாய் நிலவுலகிலிருப்பது ஒப்புநோக்கிக்கூறும் அபூரணநன்மையாகிய விசேடநன்மையாம். பயன்கருதாமல் எப்பொருளை இச்சிக்கின்றோமே அதுவே சுத்தநன்மை எனப்படும் உலகநன்மை. உதாரணங்கள் இன்பம்,

காட்சி, புகழ், ஞானம் முதலியன. ஒரு நன்மையை எடுத்து அதன் பயன்களை அதினின்றும் வேறுய்ப் பிரித்து விலக்கினுல் நன்மை என்ற பொருளில்லாமல் எண்ணமும் அமைப்பும் மாத்திரம் எஞ்சிநிற்கும். இவ்வாறு நாம் பெற்ற பொருளின் அமைப்பு (குணமில்லாக்குணிபோல) இல்பொருளாகும். சிறப்புப் பொருளில்லாவிடின் இச்சிறப்புப்பொருள்களின்றியிராத பொதுப்பொருளும் இல்லாது ஒழிந்துவிடும். வெண்மையானபொருள்களில் வெண்மைத்தன்மையைப் பிரித்துச்சிந்திக்கலாம். ஆனுல் புகழ், ஞானம், காட்சி, இன்பம் முதலியவற்றில் பொது இனம் இன்மையான் அவை தனிப்பொருள்களாகவே கருதப்படும். இவ் வெவ்வேறுபொருள்களுக்கு நன்மை பொதுக்குணமாயின் நன்மையென்னும் மொழி பலபொருளுடைத்து. இத்தகைய நன்மைத்தன்மை இப்பொருள்களில் இன்றெனக் காட்டினும். இவற்றில் பொது அமைப்பே இல்லையானுல் ஏன் பொதுச்சொல்லால் இவற்றினை மக்கட்குரிய நன்மையெனக் கூறுகிறேம்? எல்லாம் நோக்கமுடையனவாகலானும் உவமானங்கருதியும் காட்சி, இன்பம், ஞானம் முதலியவற்றை நன்மை யென்றேம். இஃது மற்றென்றுவிரித்தலென்னும் இழுக்குடைத்தாகலானும் இவற்றைத் தத்துவ ஆராய்ச்சியிற் செய்வதே முறையாகலானும் இவ்வாராய்ச்சியை இத்துடன் நிறுத்துவாம்.

நன்மை பலவானுலும் ஒரே பொருள் உடைத்து என ஒப்பினும், ஒப்பற்ற பரமநன்மை உள்பொருளென ஒப்பினும், அப் பூரணநன்மை மனிதன் அடையக்கூடியதென வற்புறுத்துதல் தவறு. பொதுநன்மையின் இயல்பை விளக்கினவழியே சிறப்புநன்மையை அறியலாமென்பது முறைபோலத் தோன்றினும் உலக அநுபவத்திற் சிறப்புநன்மை அறிவதற்குப் பொதுநன்மையறிதல் அவசியமன்று என்பது வெளிப்படை. சாஸ்திரநூலாய்ந்த ஆசிரியர்களும் கலைஞானப்பயிற்சியில் வல்லுநர்களும் பொதுநன்மையை அறியாதிருந்தும் தத்தம் கலைஞானப்பயிற்சிகளுக்கும் சாஸ்திரங்களுக்கும் ஏற்ற முறையாகவே தமது ஆராய்ச்சிகளைச் செய்கிருர்கள். இப் பொதுநன்மையை அறிவதனுல் தச்சனும் நெசவுக்காரனும் தத்தம் தொழிற்கண் அடையும் நன்மை யாது? வைத்தியன் பொதுப்பொருளாகிய சுகத்தைத் தேடாது ஒருவனின் சுகத்தையே தேடுகிறுன்.

## 7-ம் அதிகாரம். மனிதனின் சிறப்புநோக்கம்.

இனி மகாநோக்கமென்பது என்ன? மகாநன்மை என்பது என்ன? நன்மை வெவ்வேறு கலைஞானங்களில் வெவ்வேறாகப் பேதமடைகின்றது போலும். வைத்தியத்தி லொன்றாயும் யுத்தத்தில் வேறொன்றாயும் ஒரு மகாநோக்கம் கருதியே வைத்தியத்தின் நன்மையும் யுத்தத்தின் நன்மையும் மற்றும் பிற நன்மைகளும் தேடப்படுகின்றன.

இப்படி ஒரு மகாநோக்கமுண்டாயின் அது எம்மாலடையத் தக்கது. சில நோக்கம் தன் இயல்பிலே மேன்மையுடையதாயும், சில துணைக்காரணங்களாயும் உள. சந்தோஷம் வேறோர் நன்மைக்காக விரும்பப்படும் நன்மையன்று. அதை அதன்காரணமாகவே தேடுவோம். மற்றும் புகழ், இன்பம், சுகம், யுத்தம் முதலியன சந்தோஷமடைவதற்குத் துணைக்காரணங்களாகவே தேடப்படுவன.

சந்தோஷம் என்புழி நாம் ஒருவரது சந்தோஷத்தையே குறிக்கிறோம்; ஒருவனது சந்தோஷநிலைக்குப் பிறருடைய சந்தோஷநிலையும் தேவையானால் அது அவனது மனைவியின் சந்தோஷமென்றும் மக்களின் சந்தோஷமென்றும் அயலாரது சந்தோஷமென்றும் முடிவின்றி அநவத்தைப்பட்டு அடைதற்கரியநிலையாய்விடும்.

சந்தோஷம் ஓர் மகாநோக்கமென்பதை யாரும் மறாராயினும், அதன் இன்றியமையா இலட்சணங்களை எடுத்தோதி வரைவிலக்கணம் கூறுவது நல்லது. சந்தோஷத்தின்தன்மை எம்மனிதனினும் நோக்கி அறிதற்பாலது. மனிதனின் பொதுத்தொழில் என்ன? தச்சனுக்கும் செம்மானுக்கும் சிறப்புத்தொழில் உண்டாயின் மனிதனுக்கும் சிறப்புத்தொழில் உண்டு. அது என்ன? வளருந்தன்மை புல் பூண்டு மிருகங்களுக்கும் பொது. புலன்வழிச்சேறல் மனிதனுக்கும் விலங்கிற்கும் பொதுவாகலான், உண்டுடுத்து இன்புறுதல் மனிதனின் சிறப்புத்தொழிலன்று. பகுத்தறிவின்வழி ஒழுகுதலே மனிதனின் சிறப்புத்தொழில்.

பகுத்தறிவு இருவகைப்படும். ஒன்று சுத்தபுத்தி; மற்றையது சுத்தபுத்தியின் ஆஞ்ஞைப்படியொழுகும் தத்துவம். மனிதனின் முயற்சி தன் புத்திதத்துவத்தைப் பயிற்சிபண்ணுவதே. யாழ்வாசிப்பவரின் தொழில் யாழ்வாசிப்பது ; யாழ்வல்லுநரின் தொழில் யாழ் வாசிப்பதில் நுண்ணிதாய சுவையைப் பயப்பிப்பதாம். மேன்மக்களின் தொழில் நல்லொழுக்கத்தோடுவாழ்தலாம். மேன்மகன் தன் நற்குண நற் செயலிலே மேம்பட்டுச் சுத்தபுத்தியை அப்பியசித்துத் தியானநிலையை அடைவன். இந்நிலைக்கேற்ற பருவம் வேண்டும். என்னை? கோடையில் நாள்முழுவதும் மழைபெய்தாலும் கோடை மாரியாகாது. சொற்ப காலத்திற்கு ஒருவன் சந்தோஷமாகவிருந்ததனுல் அவன் சந்தோஷநிலை அடைவதில்லை. சந்தோஷநிலை அடைவதற்கு ஒருவன் நீடித்தகாலம் சந்தோஷமாய் இருக்கவேண்டும். முதலிற் சில குறிப்புக்களைக் குறித்துப் பின்னர் அக்குறிப்பை விரிக்கும் முறையை எல்லாச்சாஸ்திரவல்லுநரும் கைப்பற்றுகிறார்கள். இந்த ஒழுக்கநூற்சாஸ்திரத்தில் விஷயம் விரிந்து கிடப்பதால் நாம் அவ்வளவு கிரமமாகவும் நுண்ணிதாகவும் ஆராய்ச்சி செய்யப்புகுந்திலேம். தச்சனும், கேத்திரகணிதனும் ஒரு கோணத்தை இருவேறுவிதமாக நோக்குவர். தச்சன் தன் தொழிற்கேற்ப ஒருவாறு மட்டமாய் அளவைசெய்வான். கணிதசாஸ்திரி மிகவும் நுட்பமாக அளப்பன். எனினும், எவ்வாராய்ச்சியிலும் காரண காரியத் தொடர்பு கவனிக்கப்படும். சாஸ்திர உண்மைகள் பெரும்பாலும் நிரூபித்துக் காட்டப்படாதன. சில உண்மைகளை வேதனுநுமானத்தாலும், சில வற்றைக் காண்டல் என்னும் வாயிற்காட்சியானும், சிலவற்றை ஒரு வகைப் பயிற்சியானும் நாம் அறிகிறோம்.

[தொடரும்.]

த. இராமநாத பிள்ளை, B.A.

---

உ

# யாப்பருங்கலவிருத்தி அபிதான அகராதி

'யாப்பருங்கலவிருத்தி'யைப் பலவருஷங்களுக்குமுன்பு நான் படிக்கநேரிட்டபோது அதில் எடுத்தாளப்பட்ட நூல்கள் பல தற்காலத்திற் காணக்கிடைக்கமாட்டா என்று தெரிந்ததால் மேற்கோள் நூல்களின் பெயரைக் குறித்துவைத்தேன். உதாரணச்செய்யுள்களில் அரசர் முதலிய பெரியோர்பெயர்களும் ஊர் முதலியவற்றின் பெயர்களும் சிற்சில வந்திருப்பதுகண்டு அவைகளையும் குறித்துவைத்தேன். இக்குறிப்புக்களைக் கொண்டு, விருத்திக்காரர்காலத்திற் கிடைக்கக்கூடியதாயிருந்த நூல்கள் எவை எனவும், அவருக்குப் பிந்தி இறந்துபோனவை எவை எனவும், அவைகளின் போக்கு எப்படி எனவும், மேற்கோட் செய்யுள்களிற் சொல்லப்பட்ட பெரியார் ஊர் முதலியவைகளைப்பற்றி அச்செய்யுள்களால் விளங்குவது என்ன எனவும் ஒருவாறு முடிவுசெய்ய யானும் முயலலாம் என்ற துணிகரம் என்னைப் பற்றியிருந்தது. நாளாக நாளாக அத்துணிவு என்னைவிட்டு நீங்க, அறிவு கேள்விகளால் வல்லாரே அம்முயற்சியை மேற்கொள்ளவேண்டும் என்று தோன்றியது. ஆகவே, அன்னோருக்குச் சற்றுவது உதவியாக இருக்குமென்று எண்ணி இவ் அகராதியை வெளியிடலானேன். இவ் வகராதி வேறுசில முயற்சிகளுக்கிடையே தயாரிக்கப்பட்டமையால் இதிற் சிலபெயர்கள் சேர்க்கப்படாமல் தவறி விடப்பட்டிருத்தலுங்கூடும். குற்றங்கள் பல இவ்வகராதியிற் காணக் கிடைக்கும் என்பதை நன்றாய் அறிந்தவனாயிருந்தும் அதன் நிமித்தமாகவேனும் செம்மையான அகராதி ஒன்றைப் பிறர் எவராலும் செய்து தமிழ் உலகுக்கு உதவுவர் என்று எண்ணியே இதை வெளிடத் துணிந்தேன்.

**குறிப்பு:** நான் உபயோகித்தது மகா-௱-௱-ஸ்ரீ பவானந்தம்பிள்ளையவர்கள் பதிப்பு (1916-7). சூத்திர எண்ணும் பக்க எண்ணும் குறித்திருக்கிறேன். உதாரணமாக, 3: 45 என்றால், சூத்திரம் 3 எனவும் பக்கம் 45 எனவும் கொள்ளவும். புள்ளிகள்(.........)காணுமிடத்து, அச்சொற்கள் நூலிற் பல இடத்தும் காண்பன எனக் கொள்ளவும்.

தி. கோ. ஆ

## நூல்களும் நூலாசிரியரும்.

## அரசர் முதலிய பெரியோர்.

## ஊர் முதலியவை.




கீழ்ப்பாக்கம்,
சென்னை.

திருச்சேறை குடிக்கந்தாடை,
கோ. ஆராவமுதன், M.A., B.L.

# கம்பராமாயணக் கௌஸ்துபமணிமாலை.

—⊃⊃⊃⊃⊂⊂⊂⊂—

## K. N. சிவராஜபிள்ளை.

(29-ம் தொகுதியின் அ௲-ம் பக்கத்தொடர்ச்சி.)

[குறிப்பு:—கம்பர் அடிகளை வேற்றுமையின்றித் தரும்பொழுது அவற்றை (" ") போன்ற இரட்டைத் தலைப்புள்ளி (Quotation marks) யுள்ளமைத்தும் சிறிது வேறுபாட்டோடு தரும்பொழுது (' ') போன்ற ஒற்றைத் தலைப்புள்ளியுள்ளமைத்தும் இங்குக் குறியீடு செய்யப்பட்டுள்ளது.]

### உவமைப்பகுதி.

75 "ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு
பூசை முற்றவும் நக்குபு புக்கெ"னப்
பேச லாய உவமையுட் பேரெழில்
மூசத் தந்த கவித்திறம் முன்னுமின்.

76 "ஈர நீர்ப்படிந் திந்நிலத் தேசில
கார்க ளென்ன வருங்கரு மேதி"யென்
றேரொ டுத்த இசைப்பு ளிழைத்தனன்
ஊர டுத்தவோர் காட்சிக் கொருபடம்.

77 'கோல்பி டித்தக ருடரொ மூக்குப்போல்
வால்பி டித்தொழு குங்கவி மாலை'யாம்
மால்ப டிந்தவு வமைஇ யற்கைமெய்ந்
நூல்ப டிந்தவ ரல்லர் நுவல்வரோ ?

78 'மீனெ ளித்தவான் முத்தினி டுபெந்தர்
தானெ ளித்தெ'னச் சாற்றுங் கவிநயம்
தேன ளித்தசெ ழுஞ்சொலின் சீரிய
ரான ளித்திட லன்றிமற் றுவதோ ?

79 ‘அரக்கி வன்குடர்க் கொண்ட வனுமனைக்
குரக்கு வாலிற் குயிற்றிக் குழூஞ்சிறார்
பறக்க விட்ட கதலி’ யெனப்பயன்
சிறக்கச் சொற்ற திறக்கத் தகுவதோ ?

80 நிலம கள்முக மென்ன நிறுத்திடா
துலக வூழியு றையுள்வ ரைப்படி
பலக ணித்த வுருவகப் பந்திசெய்
புலவன் புந்தியோ ரந்தம் புணர்வதோ?

81 “இடைந்து போனவி ளைஞர்தம் சிந்தைபோல்
மடந்தை மார்பின் மருவின மஞ்ஞை”யென்
றுடந்தை யாளன் உரைத்த உவமைநூற்
கடைந்து நோக்கினுங் காணக் கிடைப்பதோ?

82 ‘விண்ண வர்க்கு முனிசெயும் வேள்வியை
மண்ணைக் காத்துறை மன்னவன் மைந்தருங்
கண்ணைக் காக்குமி மையிற்காத் தா’ரென
எண்ணிக் கூறிய ஏற்றமுங் காண்பிரால்.

83 ‘எண்கின் கூட்டம் எறிந்தகி ரிக்குலம்
புண்ணி யம்பொருந் தாதமு யற்சிபோற்
சுண்ண நுண்பொடி யாகித் தொலைந்தெ’னத்
திண்ண றத்திறன் செப்பலுங் காண்பிரால்.

84 திங்க ளைக்கரி தென்னத் திருத்திய
சங்க வெண்சுதை தாங்கிய மாளிகைத்
தங்கு வெண்மை தழைப்புறப் பாற்கடற்
பொங்க லைக்குவெங் காலும் பொருத்தினன்.

85 ‘இடும்பை யெத்தனை யும்படத் தெய்தினுங்
குடும்பந் தாங்குங் குடிப்பிறந் தாரினே
துடும்பல் வேலைது ளங்கிய தில்’லென
நெடும்பு கழ்ப்பெரி யார்நிலை கூறினன்.

86 'வஞ்சப் பூசையின் வாயின் மறுகுறும்
பஞ்ச ரக்கிளிப் பான்மை கதறலும்
தஞ்ச மாயதன் சேவற் பிடிபட
அஞ்சு மன்னத் தழுங்கலுந்' தந்தனன்.

87 'கருந்த டக்கணக் காரிகை காதலர்
பொருந்த வெண்ணிப் புகுந்தக டைசிநாள்
வருந்து சீர்நகை யால்வரு மானெ'னப்
பெருந்த டையிற்பே துற்றதும் பேசினன்.

88 'வானும் மண்ணுநீர் வற்றம றுகுறும்
மீனெ னருகில் மேற்றுவள் மின்னெனக்
கான வேழங்கை விட்ட பிடி'யெனக்
கோனி ழந்தகொ டியைக்கு றித்தனன்.

89 'முன்பி ழைக்கவ றுமையில் முற்றினோர்
பொன்பி ழைக்கப் பொதிர்தனர் போலெனு
வெம்பி யந்தியில் வீடடை தாயினை
அன்பில் வந்தணை யான்கன்று' போலெனு.

90 'ஊதை தாக்க ஒசியுங் கொடியெனு
ஊதி மூட்டிடா ஊழியின் தீயெனு
ஓது மண்டத் துறைபமை வாயெ'னு
ஏதெல் லாம்பரி செண்ணி யடுக்கினன்!

91 'பார்ப்பைச் சேக்கையிற் பார்க்கும் பறவையும்
பார்ப்பு னைகுழல் பார்க்குங் கணுடியும்
மார்ப்பு கக்கன்று வாராக் கறவையும்'
ஏர்ப்பு கத்தரு மேய்ப்பினை வாய்ப்பவோ!

92 'புற்ற ராவென நெஞ்சுபு ழுங்கலும்
பற்று வேங்கைமுன் னுடு படுதலும்
செற்றயா னைக்காற் செல்லெனத் தேய்தலும்'
உற்றெ டுத்தவு வமைஒய் யாரமே.

## வேறு.

93 'புனைவா உயிர்வரு முலவை பூத்தென
அனைவா நோக்குமாக் கன்ற டைந்தெனக்
கனைகட லாழ்குநர் கலங்கண் டா'ரென
முனிவார் மகிழ்ச்சியின் முன்னல் போற்றினன்.

94 "இழைபடப் பெடையொடு மெள்ளி நள்ளிகள்
புழையடைத் தொதுங்க"லிற் புனைந்த சித்திரம்
பழையவர் பண்பினர் பரிசி லாருளம்
உளைவா ஒளித்துறை உலோபர்க் காட்டுமே.

95 "கல்வியிற் றிகழ்கணக் காயர் கம்பலை
பல்விதச் சிறுவரிற் பகர்வ புல்லரி"
சொல்விதம் தமிழ்நடை தொடங்கும் பள்ளிகள்
புல்வித மிதுவெனப் பொறித்துக் காட்டுமே.

## வேறு.

96 'வெறுங்கை நாற்றிய விழுதுடை யாலன்ன மெய்யன்
மருங்கு செய்கொடு மாம்புகு மந்தியென் னனுமன்
கருவிக் கம்மியன் கூடத்தின் பொறியெனக் காய்வான்'
தருமி யற்கையைத் தழுவுமிவ் வுவமையோ பலவால்.

## வேறு.

97 'கோட்டிலை துறும ரம்போற் கொடிகளிற் றனவே' யென்றும்
'தோட்டியென் வேதத் தாலே தொடக்குமால் யானை' யென்றும்
'காட்டினை யெரிக்கக் கட்டை போற்கவி கரிந்த' வென்றும்
தீட்டுறு முவமை யெல்லாம் தேட்டுறு முவமை யாமே.

---

